19th September 1958]

**Sri J. MATHA GOWDER :** ஜனவரி மாதம் 6-ம் தேதி நடந்த கலவரத்தில் சர்க்காருக்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இரண்டு சர்க்கார் பஸ்கள் கொளுத்தப்பட்டிருப்பதால் சர்க்காருக்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. அந்த நஷ்டத்தை ஈடு செய்வதற்கு ஏதாவது வசூல் செய்ய சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அந்தக் கலவரத்தில் பலாத்காரம் உபயோகப்படுத்தப்பட்டது. அதன் விளைவாக சர்க்கார் பஸ்கள் சேதமடைந்தன. அதன் மூலம் ஐம்பது ஆயிரம் ரூபாய் சர்க்காருக்கு நஷ்டம். அதை யாரிடமிருந்து வசூல் செய்வது என்பது தெரியவில்லை.

**Sri K. ANBAZHAGAN :** இந்தக் கேள்விக்கு விடை அளிக்கும் காலத்தில் கலவரத்தைத் தூண்டிவிட்ட கட்சிக்காரர்கள் என்ற முறையில் கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார். கலவரத்தை தூண்டிவிட்ட கட்சிக்காரர்கள் என்று சொல்வது சரியல்ல.

**Thr Hon. Sri M. BHAKTAVATSALAM :** கட்சிக்காரர்கள் என்ற வார்த்தை என் வாயிலிருந்து வரவே இல்லை.

**Mr. SPEAKER :** தயவுசெய்து உங்களுடைய பாயிண்ட் ஆப் ஆர்டரைக் கேளுங்கள்.

**Sri K. ANBAZHAGAN :** நான் சொல்வதை மறுப்பதற்கு இல்லை. அப்பொழுது நாட்டில் நடந்த கலவரம் சம்பந்தமாக நீதி மன்றத்தில் வழக்குகள் நடைபெற்று வருகின்றன. அப்படி நாலைந்து வழக்குகள் பதிவாகி நடைபெற்று வருகின்றன. அந்த நிலைமையில் ஒரு குறிப்பிட்ட கட்சிக்காரர்கள் அதற்கு பொறுப்பு என்ற முறையில் விடை அளித்தால் அது சரியா, அப்படி பதில் சொல்லலாமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** " கில்டி காண்ஷியன்ஸ் " என்று ஒரு பழமொழி சொல்வதுண்டு. நான் பதில் சொல்லும் காலத்தில் கலவரத்தை தூண்டிய கட்சிக்காரர்கள் என்று பதில் சொல்லவில்லை. கலவரம் செய்தவர்கள்தான் பொறுப்பு என்று சொன்னேன். வேறு ஒன்றும் சொல்லவில்லை.

**Mr. SPEAKER :** I would like to know if there are cases in Court on this. I am not aware of any case on this. The Hon. Speaker is not expected to know what cases are in the Court, unless some hon. member brings them to his notice. If the hon. member says, it is *sub judice* I take the information from him.

**Sri A. GOVINDASAMY:** இதைப்பற்றிய வழக்குகள் கோர்ட்டில் இருப்பதால் இந்தக் கேள்விக்கு கேட்கப்பட்ட உப கேள்விகளையெல்லாம் சட்டசபை நடவடிக்கையிலிருந்து " எக்ஸ்பஞ்ச் " பண்ணும்படியாக உத்தரவு போட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER :** அது முடியாது.

*Harijan trustees in temples*

***331 *Q*.—Sri M. C. MUTHUKUMARASWAMY:** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கடந்த 6—4—1958-ல் மாநில ஹரிஜன நல கமிட்டியாரால் அரசாங்கத்தின் மேற்பார்வையிலும் ஆதீனங்களின் மேற்பார்வையிலும் உள்ள தேவஸ்தானங்களில் அவசியமாக ஹரிஜன தர்மகர்த்தாக்களை நியமிக்க வேண்டுமென அனுப்பிய தீர்மானத்தின் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது ?

[19th September 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It was examined by the Government and found to be impracticable under the provisions of the Hindu Religious and Charitable Endowments Act, 1951.

SRI M. C. MUTHUKUMARASWAMY : தீண்டாமை ஒழிப்புச் சட்டம் செய்தபிறகும் இன்னும் ஆதினங்கள், பல ஆதினங்களின் பொறுப்பில் இருக்கும் கோவில்களில் ட்ரஸ்டிகளை புதியதாக நியமிக்கும்போது அரிஜனங்களைப் போடுவது இல்லை. மற்றும் உத்தியோகஸ்தர்களை நியமிக்கும்போதும் அரிஜனங்களைப் போடுவதில்லை. இனியாவது சர்க்கார் அவர்கள்மீது நடவடிக்கை எடுத்து அரிஜன உத்தியோகஸ்தர்களையும் அரிஜன தர்மகர்த்தாக்களையும் நியமிக்க தீவிர நடவடிக்கை எடுக்க முன் வருவார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரிஜன தர்மகர்த்தாக்களை நியமிக்கும் விஷயத்தில் அரசாங்கம் வேண்டிய கவனம் செலுத்திக் கொண்டு வருகிறது. ஆனால் செய்வதை யெல்லாம் சட்டத்திற்குள்பட்டுதான் செய்ய முடியும்.

SRI K. B. S. MANI : இந்தக் கோவில்களில் தர்மகர்த்தாக்களை நியமிக்கும்போது, தஞ்சை ஜில்லாவைப் பொறுத்த அளவில், எத்தனை அரிஜன ட்ரஸ்டிகளை நியமித்திருக்கிறார்கள் ? எத்தனை கோவில்களில் அரிஜன தர்மகர்த்தாக்களை நியமிக்கும்போது அங்கே ஏற்கெனவே நியமிக்கப்பட்ட ஜாதி இந்து தர்மகர்த்தாக்கள் ராஜினமா செய்து விடுவோம் என்று சர்க்காருக்கு புகார் செய்திருக்கிறார்கள். அதன் பேரில் சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இத்தகைய தகவல் ஒன்றும் என்னிடம் இல்லை.

SRI P. G. MANICKAM : பதவி காலம் முடிந்து புதியதாக கோவில்களுக்கு தர்மகர்த்தாக்களை நியமிக்கும்போது அரிஜனம் ஒருவரை அவசியம் நியமிக்க வேண்டும் என்று இந்து அறநிலைய பாதுகாப்புச் சட்டத்தில் பாதுகாப்பு இருக்கிறதா ? அப்படி இருந்தால் ஏதாவது அதன்பேரில் நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறதா ? அப்படி எடுக்கா விட்டால் அரசாங்கம் தக்க நடவடிக்கை இனிமேலாவது எடுக்கச் சொல்லுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: முன்னமேயே பதில் சொல்லி விட்டேன். அவசியமாக எடுக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ள முடியாது. எவ்வளவு தூரம் எடுக்க முடியுமோஅவ்வளவு தூரம் சட்டத்திற்குள்பட்டு எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஆஸ்திகம் வளரக்கூடிய இடங்களில் நாஸ்திகத்தை வளர்க்கக்கூடியவர்களை நியமிக்கக்கூடாது என்ற எண்ணம் பொது மக்களிடத்தில் இருந்து கொண்டு வருகிறது. அந்த முறையில் நியமிக்க அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER: இந்தக் கேள்வி கோவில்களில் தர்மகர்த்தாக்களை நியமிக்கும் விஷயம். ஆஸ்திகமும் நாஸ்திகமும் இதில் வராது. அதனால் இந்தக் கேள்வி எழவில்லை.

SRI A. V. P. ASAITHAMBI : கோவில்களில் அரிஜன அர்ச்சகர்கள் இருக்கிறார்களா ? அப்படி இல்லா விட்டால் இனி மேலாவது ஹரிஜன அர்ச்சகளைப் போடுவதற்கு சர்க்காருக்கு உத்தேசம் உண்டா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அர்ச்சகர்களை நியமிக்கும் விஷயத்திலும் சில நியமன விதிகள் இருக்கின்றன. அதன்படிதான் அவர்கள் நியமிக்கப்படுகிறார்கள். ஜாதியிலும் கூட வேறுபட முடியாது.